REGD. No. TN MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 35 காசு

**பெருந்தன்மை**

அரசியல் பெருந்தன்மை கொடுத்து வாங்குவது ஒன்றே தவிரஒரே வழியில் செய்கிற வியபாராம் அல்ல.

-பேரறிஞர்அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**அறிவு**

அறிவிற்கு ஏற்றது, மக்களுக்கு நன்மை பயப்பது எதுவோ அதைப்பற்றியே பேசுவேன்.

-தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 18—4—1981 சனி வெளியூர் 19—4—1981 ஞாயிறு இதழ் 179

ராமநாதபுரம் கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் ஆறுதல் கூறினார்.

## கலவரம் நடந்த அன்றே அரசு நடவடிக்கை

# கலவரத்தை தூண்டிய சுயநலசக்திகள்

### முதல்வர் புரட்சித்தலைவர் பேட்டி

**சென்னை, ஏப். 18- ராமநாதபுரம் கலவரத்தில் அமைதி ஏற்பட்டு குறிப்பிடத்தக்க மாறுதலை அடைந்துள்ளது. கலவரம் ஏற்பட்ட உடனேயே உரிய நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று புரட்சித்தலைவர் கூறினர்.**

சில சுயநல சக்திகள் சொந்த ஆதாயத்திற்காக இந்தக் கலவரத்தை தூண்யடிது என்றும் முதல்வர் புரட்சித்தலைவர் குற்றஞ்சாட்டினர்.

மதுரையில்நேற்று முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் அனைத்துத் தரப்பினரையும் கொண்ட அமைதிக்குழுவின் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் மற்றும் பரிந்துரைகள் பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் நிருபர்களிடம் தெரிவித்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர் நிருபர்களிடம் கூறியதாவது:

கலவரம் நடந்த பகுதிகளில்மாமூலான வாழ்க்கை நடத்த மக்களுக்கு சகல வசதிகளையும் செய்து தருவோம்.

மக்களுக்குத் தேவையான பாதுகாப்பு ஏற்பாடுகள் அனைத்தும் செய்யப்படும்.

கலவரத்தால் பாதிக்கப்பட்ட மக்கள் எங்கிருந்தாலும் அவர்களுக்குஅரிசி மற்றும் உணவுப் பொருட்கள் வழங்கப்படும்.

### அரசுக்கு சிபார்சுகள்

இந்தக்கலவரம்,தோன்றயார், அல்லது எந்தக் கட்சி அல்லது எந்த அமைப்புகளைச் சேர்ந்த தலைவர்கள்போன்ற யாராக இருந்தாலும் அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என அனைத்துத் தரப்பினரும் கலந்து கொண்ட குழுவினர் அரசுக்கு பரிந்துரை செய்துள்ளனர்.

கலவரத்தில் வீடு மற்றும் பொருட்களை இழந்தவர்கட்கு கூடுமான வரை நட்டஈடு அளிக்க வேண்டும் எனவும் குழு தெரிவித்துள்ளது.

கலவரத்திற்கு ஆளான பகுதியில் உள்ளோருக்கு தாக்குதல் நடத்திய பகுதியில் உள்ளோர் நட்டஈடு தரத்தக்க வகையில் சட்டம் கொண்டுவர வேண்டும் எனவும் குழு கருத்து தெரிவித்துள்ளது.

வகுப்புக் கலவரத்தைத் தூண்டிவிட்டு நாட்டின் அமைதியை குலைக்கும் நடவடிக்கையில் ஈடுபடுவோருக்கு சட்டப்படி தண்டனை அளிக்க அரசு நடவடிக்கை எடுப்பதோடு எந்த ஒரு கட்சியோ, கட்சிகளோ, அமைப்புகளோ, வகுப்புக்கலவரங்களை தூண்டிவிடும் செயலில் ஈடுபட்டால் அவைகளை தடை செய்ய வேண்டும் எனக் குழுவினர் கருத்து தெரிவித்துள்ளார்கள்.

### செய்தி தொடர்பு

கிராமப் பகுதி மக்களுக்கும், நகரப்பகுதி மக்களுக்கும் இடையே தகுந்த செய்தி தொடர்பினை ஏற்படுத்தவும், தேவைப்படும் இடங்களில் காவல் நிலையங்களை நிறுவவும், போக்குவரத்து வசதிகளை மேம்படுத்தவும் வேண்டும் என இக்குழுவினர் கருத்துத் தெரிவித்து உள்ளனர்.

48 மணி நேரத்திற்குள் பயங்கரமான ஆயுதங்களை வைத்திருப்போர் அவற்றை காவல் நிலையங்களில் ஒப்படைக்க வேண்டும் எனவும், அவ்வாறு ஒப்படைக்காதவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுத்து ஆயுதங்களை பறிமுதல் செய்ய வேண்டும் எனவும் இக்குழு கேட்டுக் கொண்டுள்ளது.

எல்லா மாவட்டங்கள் வட்டங்கள், ஒன்றியங்களிலும் அமைதிக்குழு ஏற்படுத்த வேண்டும் என இக்குழு கேட்டுக்கொண்டுள்ளது.

வதந்திகளைப் பரப்பும் வகையில் செய்திகளை பிரசுரிக்கவேண்டாம்என பத்திரிகை ஆசிரியர்களை இக்குழு கேட்டுக் கொண்டுள்ளது.

கலவரத்தால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருவோருக்கு தக்க உதவிகளும் கலவரத்தில் இறந்தோர் குடும்பத்திற்குதக்க உதவிகளைச் செய்யவும் இக்குழு பரிந்துரை செய்துள்ளது.

இவ்வாறு குழுவினர் தெரிவித்த பரிந்துரைகள் குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

### வறட்சி நிவாரணம்

தொடர்ந்து நிருபர்கள் கேட்டகேள்விகளுக்கு பதில் அளிக்கையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

காவல்துறையினர் உரிய காலத்தில் நடவடிக்கை எடுக்காததால் ராமநாதபுரம் கலவரம் மற்ற கிராமங்களுக்குப் பரவியதாக கூறப்படும் புகார் ஆதாரமற்றது.

ஏப்ரல் மாதம்10-ந்தேதி ராமநாதபுரத்தில் கலவரம் தோன்றியது. அன்றே 144 தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

### சுயநல சக்திகள் தூண்டல்

சில சுயநல சக்திகள் தங்கள் சொந்த ஆதாயத்திற்காக இப்போதைய கலவரத்தை உருவாக்கி தூண்டிவிட்டன.

இப்போது நிலைமையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டுள்ளது.

இங்குமங்குமாக நடந்துள்ள சில சம்பவங்களைத் தூண்டி விட்டவர்கள் அரசியல்கட்சிகளால் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு நிலமை கைமீறிப் போய்விட்டதாக ஒரு எண்ணத்தைப் பரப்ப முயன்று வருகிறார்கள்.

வறட்சி நிவாரணத்திற்காக இது வரை சுமார் 25 கோடி ரூபாய்க்கு மேல் செலவு செய்துள்ளோம். மேலும் கொடுத்துக் கொண்டேயுள்ளோம்.

வறட்சியை ஒட்டிய மத்தியஅரசின்உதவிவிரைவில் கிடைக்கும்என எதிர்பார்க்கிறோம்.

### 12 ஆயிரம் போலீசார்

ஏற்கனவே அரசு எடுத்த

(4 ம் பத்தி பார்க்க)

### முக மூடி எழுத்தாளர் மீது நடவடிக்கை

மதுரை, ஏப். 18- மதுரையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில்நிருபர் கேட்ட கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

அரசு பதவியில் இருந்து கொண்டுபெயரைமாற்றிக் கொண்டு கருத்துகளை வெளியிடுவோர் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு முதல்வர் தெரிவித்தார்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

முடிவுப்படிகாவல்துறைக்கு 12 ஆயிரம் பேர்கள் தேர்ந்து எடுக்கப்படுவார்கள்.

ஒருவர் குறிப்பிட்ட கட்சியைச் சார்ந்தவர் என்பது வேலைக்குத் தேர்ந்து எடுக்க தடையாக இராது.

பச்சை குத்திக்கொண்டதும் ஒரு தடையாக இருக்க முடியாது.

சென்னை நகருக்கு குடிநீர் வசதி திட்டத்தைப் போலவே மதுரைக்கும் குடிநீர் அளிக்க அரசு தீவிர அக்கறை காட்டி வருகிறது.

மதுரையில் குடிநீர் வசதியை அதிகரிக்க எல்லா வழிகளையும் அரசு ஆராய்ந்து வருகிறது.

இதற்காக கல்லாறு நதியை திருப்பி விடுவது பற்றி கேரள அரசுடன் பேச்சு வார்த்தை நடந்து வருகிறது. இதற்கு மத்திய அரசின் உதவியும் கோரப்பட்டுள்ளது.

இவ்வாறு முதல்வர் கூறினர்.

சிவாஜி மன்றத்தினர் போராட்டம் குறித்து கேட்கப்பட்டதற்கு முதல்வர் கூறியதாவது:-

சிவாஜி மன்றத்தினர் போராட்டம் குறித்து இந்திரா காங்கிரஸ் தலைமை பதில் சொல்லியுள்ளது. அதற்கு மேல் நான் என்ன கூற உள்ளது?

சிவாஜி மன்றத்தினர் நிழலுடன் காற்றுடன், கற்பனையுடன் போராட்டம் நடத்துகிறார்கள்.

அமைச்சர் காளிமுத்து தன் பேச்சு குறித்து விளக்கம் சொல்லிவிட்டார்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

# அமைச்சர் காளிமுத்துக்கு சிவாஜி ரசிகர்கள் கொலை மிரட்டல் கடிதம்

**சென்னை, ஏப். 18-அமைச்சர் காளிமுத்துவுக்கு சிவாஜி ரசிகர்கள் கொலைமிரட்டல் கடிதம் எழுதியிருக்கிறார்கள். காளிமுத்துவின் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்று அந்தக் கடிதத்தில் கூறப்பட்டுள்ளது.**

அமைச்சர் காளிமுத்துவுக்குஎதிராகசிவாஜிரசிகர்கள் கடந்த சில நாட்களாக சலசலப்புக் காட்டி வருவது தெரிந்ததே.

காளிமுத்துசெல்கிறஇடங்களில்எல்லாம்கறுப்புக்கொடி காட்டுகிறார்கள். காளிமுத்துவைத் தரக்குறைவாகத்திட்டி சுவர்களில் எழுதி வருகிறார்கள்.

காளிமுத்துவுக்கு எதிரான சுவரொட்டிகளை ஒட்டி வருகிறார்கள் கடந்த வியாழன் அன்று உண்ணா விரதமும் இருந்தார்கள்.

சிவாஜிரசிகர்களின் இத்தகைய நடவடிக்கைகள் இந்திரா காங்கிரஸ் தலைமையின் முடிவுக்கு விரோதமானவையாகும். இதை தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர் எம்.பி. சுப்பிரமணியமே தெளிவு படுத்தியிருக்கிறார்.

இந்தச் சூழ்நிலையில் அமைச்சர் காளிமுத்துவுக்கு சிவாஜி ரசிகர்கள் ஒரு கொலை மிரட்டல் கடிதத்தை எழுதியிருக்கிறார்கள்.

சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் உள்ள 'நடிகர் திலகம் சிவாஜிகணேசன் கலைக்குழு' வின் லட்டர் பேட் காகிதத்தில் அந்தக் குழுவின் செயலாளர் என்று போடப்பட்டிருக்கும் சிதம்பரம் என்பவர் கையெழுத்தைத் தாங்கி அந்தக் கொலை மிரட்டல் கடிதம் வந்திருக்கிறது.

அந்தக்கடிதத்தில் எழுதப்பட்டுள்ள வாசகங்கள் அப்படியே வருமாறு:

திரு. காளிமுத்து(அமைச்

(6 ம் பத்தி பார்க்க)

## புரட்சித்தலைவரின் நேரடி நடவடிக்கை எதிரொலி:

# ராமநாதபுரத்தில் பூரண அமைதி

### கடைகள் திறக்கப்பட்டன - பஸ்கள் வழக்கம்போல் ஓடுகின்றன

மதுரை, ஏப். 18— ராமநாதபுரம் பகுதியில் கலவரம் நடந்த இடங்களை முதல்வர் புரட்சித்தலைவர் நேரில் சுற்றிப் பார்த்து பல்வேறு நேரிடை நடவடிக்கைகளை மேற்கொண்டதை அடுத்து தற்போது அப்பகுதிகளில் பரிபூரண அமைதி ஏற்பட்டுள்ளது.

ராமநாதபுரத்தில் இன்று கடைகள் வழக்கம்போல் திறந்து இருந்தன. பஸ்களும் முழு அளவில் ஓடுகின்றன.

ராமநாதபுரம் பகுதியில் கலவரம் நடந்த பகுதிகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் நேரில் சென்று நிலைமையைக் கண்டறிந்து பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டது தெரிந்ததே.

முதல்வர் புரட்சித்தலைவரின் நேரிடை நடவடிக்கையின் விளைவாக ராமநாதபுரம் பகுதியில் தற்போது பூரண அமைதி ஏற்பட்டுள்ளது.

ராமநாதபுரத்திலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் இன்று காலை வழக்கம் போல் எல்லா கடைகளும் திறந்திருந்தன.

முதல்வர் வருகையை அடுத்து சகலதரப்புமக்களும் அச்சம் நீங்கிசகஜமாக நடமாடத் துவங்கியுள்ளனர்.

கலவரம் காரணமாக சில கிராமங்களில் இருந்து வெளியேறியவர்கள் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பியுள்ளனர்.

### தீவிர ஏற்பாடு

கலவரத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனடியாக தக்கநிவாரண உதவிகளை அளிக்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டதன்படி, நிவாரண நடவடிக்கைகளை ஆர். டி. ஓ. ராமமூர்த்தி, தாசில்தார் மயிலேறுநாதன் ஆகியோர் கவனித்து வருகிறார்கள். அரசின் தக்க நடவடிக்கைகளால் ராமநாமநாதபுரம் பகுதியில் மாமூல் நிலைமை முழு அளவில் திரும்பி விட்டது.

இருப்பினும் ராமநாதபுரம்பகுதியில் தொடர்ந்து பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### பஸ்கள் ஓடுகின்றன

கடந்த சில நாட்களாக ராமநாதபுரம் பகுதியில் முழு அளவில் பஸ்கள் ஓடாமல் இருந்தது.

இன்றுமுதல் பஸ்கள் அப்பகுதியில் ஓடத்துவங்கியுள்ளதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

### திருப்பத்தூர் தேர்தல்: முதல்வர் விளக்கம்

மதுரை, ஏப். 18. திருப்பத்தூர் தேர்தல் குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

திருப்பத்தூர் தேர்தல் பற்றி ஆராய குழு ஒன்றை அமைத்துள்ளோம்,

இந்தத் தேர்தல்குறித்து கழகத்துடன் இந்தியகம்யூனிஸ்ட் கட்சியினர் கடிதத் தொடர்பு கொண்டனர்.

இவ்வாறு முதல்வர் கூறினர்,

(3-ம் பத்தி தொடர்ச்சி)

சர்) அவர்களுக்கு கடந்த சில வாரங்களாக தாங்கள் பொறுப்பின்றி- அநாகரிகமாக. வரம்பு மீறி பிரதமர் இந்திராகாந்தி அவர்களையும், மற்றும் மத்திய மந்திரிகளையும் இழிவுபடுத்தும் வகையில் பேசி வருவதால், தாங்கள் இத்தோடு நிறுத்திக் கொள்ளாவிட்டால் உங்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்று இதன் மூலம் எச்சரிக்கை செய்கிறேன்.

இப்படிக்கு
சிவாஜி ரசிகன்
சிதம்பரம்

இவ்வாறு அந்தக்கடிதத்தில் எழுதப்பட்டுள்ளது.

போராட்டம் நடத்த

காரணம் தேடி அலையும்

# சிவ. இளங்கோவுக்கு கருவூலத்துறை ஊழியர்கள் கண்டனம்

**நெல்லை, ஏப். 18— கருணாநிதி ஆட்சியில் அகவிலைப்படிக்கு உச்சவரம்பு கட்டியபோது வாய் மூடி மவுனமாக இருந்த சிவ. இளங்கோ இப்போது போராட்டம்நடத்தகாரணங்களைத் தேடி வருவதாக கருவூலக் கணக்குத்துறை ஊழியர்கள் குற்றஞ் சாட்டியுள்ளனர்**

தமிழ்நாடு கருவூலக் கணக்குத்துறைஅரசு அலுவலர்கழகம்நெல்லை மாவட்டம்) சார்பில் அதன் செயலாளர் சி. சுடலைமணி வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

சிவ. இளங்கோ தலைமையில் உள்ள சங்கம் இந்த அரசை எதிர்த்துப் போராட்டம் நடத்த முடிவு செய்துள்ளது.

அதற்காக அந்த சங்கம் கருவூலக் கணக்குத்துறை ஊழியர் பிரச்சினை தீர்க்கப்படவேண்டும் என்றும் ஒரு காரணத்தை சொல்லி இருக்கிறது.

இந்த ஆட்சி வந்த பிறகு தினம் ஒரு போராட்டத்தை சிவ இளங்கோ நடத்தி வருகிறார்.

ஆனால் இதே சிவ.இளங்கோ கருணாநிதி ஆட்சியில் எப்படி செயல்பட்டார்?

அகவிலைப்படிக்கு உச்சவரம்பு நிர்ணயித்த போது வாய் மூடி மவுனியாக இருந்தார்.

போராட்டம் பற்றிஎந்த ஒட்டெடுப்பையும் நடத்தவில்லை. கருவூலக் கணக்குத்துறை ஊழியர் பிரச்னைகளுக்காக சிவ இளங்கோ நடத்திய போராட்டங்களில் கருவூலத்துறை ஊழியர்கள் கலந்து கொள்ளவில்லை.

எங்கள் சங்கத்தலைவர் லட்சுமிநரசிம்மன் இந்தப் பிரச்சினை குறித்து முறையாக அரசுக்கு கொண்டு சென்று இருக்கிறார்.

இதில் சாதகமான முடிவை எதிர்பார்த்து இருக்கிறோம்.

இந்த நேரத்தில் இதில் முடிவு வந்துவிடக்கூடாது என்று கருதும் சிவ. இளங்கோ எங்கள் பிரச்னையை எடுத்துக் கொண்டு இதற்காக போராட்டம் என்கிறார்.

காரணங்களுக்காகப் போராட்டம் என்ற நிலை மாறி போராட்டங்களுக்காக காரணங்களைத் தேடி அலைகிறார்.

இவ்வாறு சி. சுடலைமணி கூறியுள்ளார்.

நகைக்காக

பெண்ணை கொலைசெய்த

## வாலிபர் கைது: மடக்கி பிடித்த போலீசுக்கு பரிசு

சென்னை, ஏப். 18. சென்னை சைதாபேட்டை மருதி தெருவைச் சேர்ந்த வேல்முருகனின் மனைவி காந்தாவை வசந்த் என்ற தர்மராஜ் பாண்டியன் நகைக்காக கொலை செய்துவிட்டு ஓடிவிட்டதாக கூறப்பட்டது.

தலைமறைவாகி விட்ட தர்மராஜ் பாண்டியன் நேற்று பீச் ரோடில் சென்று கொண்டிருந்தான். அப்போது போலீஸ் வேன் ஒன்று அவ்வழியாக வந்தது. அதைக் கண்டவுடன் தர்மராஜ் பாண்டியன் தப்பி ஓட முயற்சித்தானும்.

இவன் ஓடுவதைக்கண்ட போலீசார் அவனை விரட்டிப் பிடித்து கைது செய்தனர்.

தர்மராஜ், பாண்டியனை கைது செய்த போலீசாருக்கு வெகுமதி வழங்கப்படும் என சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் தெரிவித்துள்ளார்.

திருநெல்வேலியில்

## வாலிபர்கொலை: ஆசாமி சரண்

திருநெல்வேலி, ஏப். 18. திருநெல்வேலி நகரில் 30 வயது மதிக்கத்தக்க வாலிபர் ஒருவர் கொலை செய்யப்பட்டார்.

இது தொடர்பாக கோர்ட்டில் ஒருவர் சரணடைந்தார்.

முன் விரோதம் காரணமாக இக்கொலை நடந்ததாகக்கூறப்படுகிறது.

தலைமைக் கழக அறிக்கை எண் 69/81

## புதுவை மாநில கழகத் தோழர்களுக்கு

புதுவை மாநில நிர்வாகிகள், மற்றும் தலைமைக் கழகப் பொதுக் குழு உறுப்பினர் பொறுப்புகளுக்கும் வேட்பு மனு தாக்கல் செய்துள்ளவர்கள் வருகின்ற 19 4-81 மாலை 5 மணி முதல் இரவு 7-மணிக்குள்ளாக புதுவை நகராட்சி பயணியர் விடுதியில் தலைமைக் கழக தேர்தல் ஆணையாளரிடம் நேரில் வந்து கடிதம் எழுதிக் கொடுத்து வாபஸ் பெற்றுக் கொள்ளலாம்,

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்.

சென்னை—14
18-4-81

தலைமைக் கழக அறிக்கை எண்: 70 81

## கிழக்குத் தஞ்சை மாவட்டம் மன்னார்குடி நகர கழகத் தோழர்களுக்கு

கிழக்குத் தஞ்சை மாவட்டம் மன்னார்குடி நகரத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் கிளைக் கழகங்கள் முறையாக இல்லாததாலும் வட்டவாரியாக கிளைகள் பதிவாகாததாலும் ஒரு வட்டத்தில் உறுப்பினராக இருப்பவர் வேறு வட்டத்தில் பொறுப்புகளில் இருப்பதாலும் நகரத்துக்கு உட்பட்ட கிளைக் கழகங்கள் அனைத்தும் கலைக்கப்படுகிறது.

மாவட்டக் கழகத் தேர்தல் முடிந்த பின்னர்முறையாக கிளைகள் பதிவு செய்யப்பட்டுவார்டு வாரியாக தேர்தல் நடத்திய பிறகு நகரக் கழகத் தேர்தல் நடத்தப்படும்.

இவ்வறிவிப்புமாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் வெளியிடப் படுகிறது.

ப உ சண்முகம்
பொதுச்செயலாளர்

சென்னை-14,
18-4-81

## கள்ளச் சாராயம் குடிக்க படையெடுத்த யானைகள்

டேராடுன், ஏப். 18— கள்ளச்சாராயம் குடிப்பது என்றால் யானைகளுக்கு படு கொண்டாட்டம்போலும். டேராடுன் அருகே சித்ர வாலா காட்டுப்பகுதியில் கள்ளச்சாராயம் காய்ச்சப் படுகிறது.

இந்த கள்ளச் சாராயத்தை குடிக்க ஆவலோடு வந்த யானைகளைக் கண்டு கள்ளச் சாராயம் காய்ச்சுவோர் சாராயம் போனாலும் போகிறது தங்கள் உயிர் தப்பினால் போதும் என ஓட்டம் பிடித்தனர்.

பெரும் பெரும் பானைகளில் காய்ச்சி வைக்கப்பட்டிருந்த சாராயத்தை யானைகள் ஆவலோடு குடித்தன.

சாராயம் குடித்த மயக்கத்தில் யானைகள் சாராயப் பானைகளைப் போட்டு உடைத்தன. அதன் பிறகு தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்றன.

இதுபற்றி வனத்துறை காவலர் ஒருவர் கூறுகையில் யானைகள் இவ்வாறு கள்ளச்சாராயம் குடித்துவிட்டு செல்லுவது அடிக்கடி நடக்கிறது என்றும் சமீபத்தில் ஒரு யானை இவ்வாறு கள்ளச்சாராயத்தை குடித்துவிட்டு இளம் பெண் ஒருத்தியைத் தாக்கியதாகவும் கூறினார்.

வறட்சி நிவாரணப்பணிகளுக்கு

தொழில் அதிபர்கள் வழங்கும் நிதிக்கு

# வருமான வரிச்சலுகை பெற்றுத்தர ஏற்பாடு: திருநாவுக்கரசு பேட்டி

**சென்னை, ஏப். 18. வறட்சி நிவாரணப்பணிகளுக்கு அளிக்கும் தொகைக்கு வருமான வரிச்சலுகை பெற்றுத்தா முதல்வர் புரட்சித்தலைவர் அரசு மத்திய நிதியமைச்சருடன் தொடர்பு கொண்டுள்ளதாக அமைச்சர் திருநாவுக்கரசு அறிவித்தார்.**

இன்று நடந்த தொழில் அதிபர்கள் கூட்டத்தில் ரூ. 5 ஆயிரம் மதிப்புள்ள மருந்தும், 500 டன் ஆட்டா மாவும் வறட்சி நிவாரணப் பணிக்கு கூட்டத்திலேயே வசூல் ஆகியது.

தலைமைச் செயலகத்தில் உள்ள 10 மாடிக் கட்டிடத்தில் தொழில் அதிபர்கள் கூட்டத்தைஅமைச்சர் திருநாவுக்கரசு இன்று கூட்டினார்.

தமிழகத்தில் ஏற்பட்டுள்ளவறட்சியைப்போக்குவதில் தொழில் அதிபர்களும் பங்கு கொள்ள வேண்டுகோள்விடுக்கும் வகையில் இக்கூட்டத்தை கூட்டி இருந்தார்.

ஈசன் கம்பெனி ஈஸ்வரன், டி.வி. எஸ். சந்தானம், கே. வி. சீனிவாசன், சங்கர், குமார், நரசிம்மன் மற்றும்வேறுதொழிற்சாலை பிரதிநிதிகள் உட்பட 20க்கும் மேற்பட்டோர் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

ஆந்திர வர்த்தக சங்கம், மாவு மில் அதிபர்கள் சங்கம், தமிழ்நாடு தாதா பார்மாசூடிகல்ஸ் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

தொழில் அதிபர்கள் கூட்டத்தில் அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகையில் கூறியதாவது:-

தமிழ்நாட்டில் கடும் வறட்சி ஏற்பட்டுள்ளது. இந்த வறட்சியைப் போக்கும் நிவாரணப் பணிகளை அரசு மட்டுமே நிறைவேற்றிட முடியாது

பெரிய தொழில் அதிபர்களும் நிறுவனங்களும், சங்கங்களும்முன் வந்து இந்த வறட்சிப் பணியில் ஒரு பங்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தமிழக அரசின் சார்பில் கேட்டுக் கொள்கிறேன்.

நீங்கள் பணமாகவும் கொடுக்கலாம். அல்லது வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள கிராமத்தை தத்து எடுத்து அப்பகுதிக்குத் தேவையான உணவு, குடிநீர், கால்நடைத் தீவனம் மருந்து போன்றவற்றைக் கொடுக்கலாம் குடிதண்ணீர் இல்லாமல் கஷ்டப்படும் பகுதி மக்களுக்கு உதவிடும் வகையில் குடிநீர் லாரிகள்கொடுத்து உதவலாம்.

### வருமான வரி சலுகை ஏற்பாடு

இந்த வறட்சிப்பணிகளுக்காக தொழில் அதிபர்கள் தரும் பணத்திற்கு வருமானவரிச் சலுகை அளிப்பதற்காக மத்திய நிதி அமைச்சருடன் பேசி இரண்டொரு நாளில் அனுமதி வாங்கித்தருகிறோம்.

இந்த அரசின வேண்டுகோளை ஏற்று இங்கு வந்த தொழில் அதிபர்கட்கு அரசின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் மற்றும் வராத நிலையில் உள்ள பெரிய தொழிலதிபர்கள் பணமாகவோ, பொருளாகவோகொடுத்து வறட்சிப்பணிக்கு உதவிட வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

பின்னர் நிருபர்களுக்கு பேட்டி அளிக்கையில் அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:-

இன்றையதினம் நடைபெற்ற தொழிலதிபர்கள் கூட்டத்தில் கலந்து கொண்ட தாதாபார்மிடிக் கம்பெனியினர் ரூ 5 ஆயிரம் மதிப்புள்ளமருந்துகளையும், மாவு மில் அதிபர்கள் சார்பில் அந்த சங்கத்தினர் 500 டன் ஆட்டா மாவும் வறட்சிப் பணிகளுக்காக கொடுத்து இருக்கின்றனர்

தமிழ்நாடு அரசு வறட்சி நிவாரணப்பணிக்காக ரூ. 28 கோடி செலவு செய்து இருக்கிறது.

குடிநீருக்காக ரூ 4 கோடியை நேற்று இரவு அனுமதித்து இருக்கிறது.

குடிநீருக்காக மட்டும் மொத்தம் ரூ 8 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. கால்நடை தீவனத்திற்காக ரூ.20 லட்சம் ஒதுக்கி இருக்கிறோம்.

வறட்சிப் பகுதியில் கால்நடைகளுக்கான தீவனத்தை நியாய விலையில் தருவதற்கு இந்த ரூ 20 லட்சம் ஒதுக்கப்பட்டு இருக்கிறது.

### 15 ரிக்குகள் வருகின்றன

தமிழகத்தில் வறட்சியைப் போக்க துளைகிணறு போடும் (ரிக்) கருவி கொடுத்து உதவும்படி பிரதமர் இந்திராகாந்தி ஒவ்வொரு மாநிலத்திற்கும் எழுதி இருந்தார்.

அதை ஏற்று மத்தியபிரதேசம் 9 இயந்திரங்களையும், ஒரிசா 4 இயந்திரங்களையும், உ. பி. இரண்டுஇயந்திரங்களையும் தமிழகத்திற்குத் தர சம்மதித்து இருக்கின்றன.

அவைகளை இங்கே கொண்டுவர தமிழக குடிநீர் வடிகால் வாரிய அதிகாரிகள் அங்கு சென்று இருக்கிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

அப்போது வருவாய்த் துறை செயலாளர் டி. வி. வெங்கட்ராமன் உடன் இருந்தார்.

## அமைச்சர் காளிமுத்து நிகழ்ச்சிகள்

ஏப்.18 விழுப்புரம் ஏப்,19 மாலை 6 மணி பூம்புகார் அரசு விழா 9 மணி சிதம்பரம் பொதுக்கூட்டம் ஏப். 20 மாலை 6 மணி சென்னை கைத்தறி விழா இரவு 9 மணி பெரம்பூர் பொதுக்கூட்டம் ஏப் 21 மாலை 6 மணி அண்ணாநகர் தங்கம் காலனி பள்ளி விழா இரவு 9 மணி ராயபுரம் பொதுக்கூட்டம் ஏப், 22 பூங்காநகர் பொதுக்கூட்டம் 23 உத்திரமேரூர் 24 துறையூர் 25 தேவகோட்டை 26 மதுரை அரசு நிகழ்ச்சிகள் இரவு திண்டுக்கல் பொதுகூட்டம்.

ஏப் 27 திருவல்லிக்கேணி பொதுக்கூட்டம். ஏப் 28 தர்மபுரி ஏப் 29 சேலம் ஏப் 30 கோவை மே 1 நெல்லை.

## அறிஞர் அண்ணா புகைப்படங்கள் தேவை

அறிஞர் அண்ணா படத்தொகுப்பு புத்தகம் ஒன்று கழகச் சார்பில் வெளியிட உத்தேசித்துள்ள காரணத்தால் அண்ணா சம்பந்தப்பட்ட புகைப்படங்கள் யாரிடத்தில் இருந்தாலும் அருள்கூர்ந்து பிரதி ஒன்று கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

— ப. உ. சண்முகம்

**அண்ணா புகைப்படக் குழு**
அனைத்திந்திய அண்ணா தி மு. கழகம்,
275, அவ்வை சண்முகம் சாலை.
ராயப்பேட்டை, சென்னை 14.

குறிப்பு: அண்ணா புகைப்படக்குழுவின் தலைவராக பெரியவர் சங்கரையா பணியாற்றுவார்.

அரிய புகைப்படங்களை அனுப்பி வைப்போருக்கு உரிய அன்பளிப்பு வழங்கப்படும்

வெடிகுண்டு

விபத்தில் இறந்த

## பார்த்தசாரதி வீட்டில் அஸ்ஸாம் முதல்வர்

சென்னை, ஏப். 18— அஸ்ஸாம் மாநிலத்தில் வெடிகுண்டு விபத்தில் மரணமடைந்த தமிழ் நாட்டை சேர்ந்த அதிகாரி பார்த்தசாரதியின் குடும்பத்தினருக்கு அஸ்ஸாம் முதலமைச்சர் அன்வாரா தைமூர் நேரில் சென்று அனுதாபம் தெரிவித்தார்.

தமிழ் நாட்டில் சுற்றுப்பயணம் செய்து வரும் அஸ்ஸாம் முதலமைச்சர் நேற்று ஆழ்வார்பேட்டையிலுள்ள பார்த்தசாரதியின் வீட்டிற்குச் சென்றார். அங்கு அவரது குடும்பத்தினரை சந்தித்து தனது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்தார். பின்னர் அவர் பத்திரிகை நிருபர்களை சந்தித்துப் பேசிய போது கூறியதாவது:

இது சம்பந்தமாக சிலர் கைது செய்யப் பட்டுள்ளனர். குற்றவாளிகளுக்கு நிச்சயமாக கடுமையான தண்டனையளிக்கப்படும் என்று தெரிவித்தார்.

## மயிலாப்பூர் அகாடமியின் 28-வது ஆண்டு விழா

சென்னை, ஏப்.18. மயிலாப்பூர் அகாடமியின் 28வது ஆண்டு விழா ராஜா அண்ணாமலைபுரத்தில் உள்ள சிருங்கேரி மடத்தில் நடந்தது.

உயர் மதிப்பெண்களைப் பெற்று தேர்ச்சி பெற்ற பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. பல்வேறு துறையில் சிறந்த சேவை புரிந்தவர்களுக்கும் பாராட்டுக் கேடயங்கள் வழங்கப்பட்டன.

விழாவிற்கு சட்டப் பேரவைத்தலைவர் ராசாராம் தலைமை வகித்தார்.

மத்திய அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் விழா சிறப்புமலரை வெளியிட்டும் பரிசுகளை வழங்கியும் பேசினார்.

அமைச்சர்கள் எச். வி ஹண்டே, பொன்னையன் ஆகியோரும் விழாவில் கலந்துகொண்டு பேசினர். மயிலாப்பூர் அகாடமியின் சேவையை அனைவரும் பாராட்டிப் பேசினர்.

முன்னதாக விழாவிற்கு வந்தவர்களை அகாடமி தலைவர் வி. வைத்திய சுப்பிரமணிய ஐயர் வரவேற்றுப் பேசினார்.

செயலாளர்.சி. எஸ். வீரராகவன் அறிக்கை வாசித்தார் துணைத்தலைவர் என். சி. ராகவாச்சாரி நன்றி கூறினார்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras 600 029.
Editor:
PARASURAMAN

வெங்கடசுப்ரமணிய ப் கோரிக்கை

# காஞ்சிபுரத்தில் ரசாயனத்தொழிற்சாலை வேண்டும்

**சென்னை, ஏப் 18. அதிக நெசவாளர்கள் வாழும் காஞ்சிபுரம் பகுதியில்ரசாயனத்தொழிற்சாலை, வடிவமைப்பு தொழிற்சாலை அமைக்கவேண்டும் என்று வெங்கடசுப்பிரமணியம் எம் எல் ஏ கோரிக்கை விடுத்தார்.**

கைத்தறி மான்ய கோரிக்கை மீது காஞ்சிபுரம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் பி.வெங்கட சுப்பிரமணியம் பேசுகையில் கூறியதாவது:-

விவசாயத்துக்கு அடுத்தது நெசவுத் தொழில். அந்த தொழிலுக்கு வளர்ச்சியளிக்கும் வகையில் திட்டமிடப்பட்டிருப்பது மகிழ்ச்சியளிக்கிறது. நெசவாளர் சங்கங்களில் வருங்காலத்தில் சரக்குகள் தேங்கியில்லாமலிருக்கும் வகையில்அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கூட்டுறவு நூற்பாலைஉற்பத்தி செய்யும் நூல்களை அந்த சங்கங்களுக்கு விற்பனை செய்யும் வகையில் நடவடிக்கை எடுக்கவேண்டும்.

கோஆப்டெக்ஸ் மூலம் சாயப்பொருட்கள் இதற்கு முன் வினியோகிக்கப்பட்டன. இப்போது அப்படி இல்லாததால்அதிகவிலைக்கு விற்கப்படுகிறது. மீண்டும் கோ-ஆப்டெக்ஸ் மூலம் விற்பனை செய்யவேண்டும்.

அதிகஅளவு நெசவுத் தொழில் நடக்கும் காஞ்சிபுரம் பகுதியில் ரசாயனத் தொழிற்சாலை அமைக்க வேண்டும்.

சிக்கன சேமிப்புதிட்டம் குருப் முறையில் சேர்க்கப்பட்டதால் 55 வயதானவர்கள் நன்மை பெற முடியவில்லை. இதனை ஆராய்ந்து அரசு தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.

நெசவாளருக்கு 500 ரூபாயை உயர்த்தி 3ஆயிரமாக வழங்குவது வரவேற்கத்தக்கது. இதுபோதாது. அதிக அளவில் தர அரசு பரிசீலிக்க வேண்டும்.

காஞ்சிபுரம் உதவிகைத்தறி இயக்குநர் மூன்று மாவட்டங்களில் உள்ள 213 சங்கங்களை கண்காணிக்கவேண்டியுள்ளது. தனித்தனியாக உதவி இயக்குநர்கள் அமைக்க வேண்டும்.

நெசவாளர்களுக்கு கூட்டுறவு வங்கி அமைக்க வேண்டும்.

நெசவாளர்கள் வீடு கட்ட தரும் தொகையை உயர்த்தி தரவேண்டும். வீடுகளை பழுதுபார்க்கவும் உதவி தரவேண்டும்.

கோ-ஆப்டெக்ஸ் கண்காட்சி ஸ்டால்கள் ஏலத்தில் விடப்படுவதாக புருஷோத்தமன் கூறினார். அப்படி அல்ல. ஒவ்வொரு சங்கத்திற்கும் இத்தனை ஸ்டால் என்றுதான் விடப்படுகிறது.

காஞ்சிபுரம் பகுதியில் கைத்தறி வடிவமைப்பு நிலையம் ஒன்றை அமைக்க வேண்டும்.

இவ்வாறு வெங்கடசுப்ரமணியம் கூறினார்.

## அறிவிப்பு

1971ம் வருட தமிழ் நாடு நகர மற்றும் நகர்ப் புறத்திட்டங்கள் சட்டம் விதி எண் 30, துணைவிதி (1)ன் கீழ் (1972ம் வருட தமிழ்நாடு சட்டம் 35ன் படி) அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தைப்பயன்படுத்தி தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் மேற்படி சட்டம் செக்ஷன் 28ன் கீழ் சென்னை நகர மயிலாப்பூர் திட்ட யூனிட், 12.8க்கு நந்தனம் பகுதியில் விரிவான அபிவிருத்தி திட்டங்களை இதன் மூலம் பிரசுரித்துள்ளார்கள்.

2. நந்தனம் பகுதிக்கான இந்த விரிவான அபிவிருத்தி திட்டங்கள் அதன் சம்பந்தப்பட்ட எல்லா இணைப்புகளுடனும், பொது மக்கள் பார்வையிடுவதற்காக, சென்னை பெருநகர் வளர்ச்சிக் குழுமம் அலுவலகத்தில் நெ. 52. ஈ.வே.கி. சம்பத்சாலை, சென்னை-600 007 விலாசத்தில் அலுவலக நேரங்களில் (காலை 10 மணி முதல் மாலை 4 மணிவரை) வைக்கப்பட்டிருக்கும்.

ஆணையர் & காரியதரிசி

dipr23469-81,13.MAC

## திட்டக்குடியில் சவுந்தரராசன் பேசுகிறார்

கடலூர், ஏப். 18— திட்டக்குடியில் வரும் 22ந் தேதி மாலை 6 மணிக்கு ஆ. கிருட்டினசாமிதலைமையில் டி. ஆர். சுந்தரம் முன்னனியில் திருச்சி ஆர், சவுந்தரராசன் பேசுகிறார்.

திருச்சி ஆர். சவுந்தரராசன் திருவாரூர் தங்கராசு, கலியமூர்த்தி எம் எல் ஏ, இரா. ரங்கசாமி, கடுப்பன், அன்பில் பாலு ஆகியோர் பேசுகிறார்கள்.

சிந்தாதிரிப்பேட்டையில்

## ப. உ. ச. பேசுகிறார்

நாள்: 20—4—81 திங்கள் மாலை 7 மணிக்கு
இடம்: சிங்கண்ண செட்டித்தெரு
தலைமை: மு. அன்புத்தம்பி
முன்னிலை: பா. லோகநாதன்
வரவேற்புரை: பெ. புகழேந்தி
சிறப்புரை:

பொதுச்செயலாளர்

**ப. உ. ச.**

ஜேப்பியார் எம். எல். சி, வேலூர் நாராயணன் திருவை அண்ணாமலை திருப்பத்தூர் ராமமூர்த்தி, புலவர் அறிவுடை நம்பி, பா வளர்மதி, கு க செல்வம், எஸ் எம் ஏ. ஜலீல், தி சண்முகம் நீலகண்டன், கோவை கணேசன், சமபத், மற்றும பலர்.

நன்றியுரை கே ஆர் சந்திரன்

## டெண்டர் அறிவிப்பு

எண்: 1390/81/D2
தேதி: 9—4—81

கீழ்க்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 12—5—81 பிற்பகல் 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது.

வேலையின் பெயர்: குப்பைமேடு திட்டத்தில் உள்ள குடிசைப்பகுதி குடியிருப்புகளுக்கு குடிநீர் சப்ளை குழாய்களில் ரிப்பேர்கள் செய்தல்.

வேலையின் உத்தேச மதிப்பீடு: ரூ. 68,000.

டேவணித் தொகை: ரூ. 680.

டெண்டர் குறிப்புகள், நிர்வாகப் பொறியாளர், டிவிஷன் VI, ஆலையம்மன் கோவில் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், சென்னை-18 அவர்களிடமிருந்து எல்லா அலுவலக நாட்களிலும், காலை 11 மணிமுதல் பிற்பகல் 4 மணிவரை, ரூ 30 + விற்பனைவரி + சர்சார்ஜ் சேர்த்து செலுத்தி (அதற்கான ரசீதை சமர்ப்பித்து) பெற்றுக்கொள்ளலாம். டெண்டர்கள் கீழ்கையொப்பமிட்டவரால் அந்த தினம் பிற்பகல் 3.05 மணிக்கு திறக்கப்படும்.

நிர்வாகப் பொறியாளர்

DIPR/23466/81-15-S.

புரட்சித்தலைவர் உடனடி உத்தரவு

# சிறுமிக்கு படிக்க ஏற்பாடு-மூதாட்டிக்கு உதவிபணம்

ராமநாதபுரம், ஏப். 18- தந்தையை இழந்த சிறுமிக்கு படிப்பதற்கு வசதி செய்ய முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

ராமநாதபுரம் அருகே உள்ள குப்பானி கிராமத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் சென்றபோது மறமுடிவலசை என்ற இடத்தில் ரயில்வே கேட் மூடப்பட்டிருந்தது அங்கு புரட்சித்தலைவரின் கார் நின்று கொண்டிருந்த போது அப்பகுதியிலுள்ள சிறுவர் சிறுமிகள், பெண்கள் உட்பட ஏராளமானோர் ஓடிவந்து சூழ்ந்து கொண்டனர்.

அங்கு வந்த சிறுவர் சிறுமிகளை அழைத்துபடிப்பு பற்றி கேட்டார்.

சிவா என்ற சிறுமி வசதி இல்லாததால்படிக்கவில்லை என்றாள். உடனே அந்த சிறுமியின் தாயை புரட்சி தலைவர் அழைத்து ஏன் படிக்க வைக்கவில்லைஎன்று கேட்டார்.

கணவர் இறந்து விட்டதால் படிக்க வைக்க வசதியில்லை என்று சிறுமியின் தாய் ராமாயி கூறினார்.

உடனே கலெக்டரை அழைத்து சிறுமியைப் படிக்க வைக்க வேண்டிய ஏற்பாடுகளை செய்யுமாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

காளிமுத்தம்மாள் என்ற 68 வயது தாய் முதல்வர் புரட்சித்தலைவரிடம் தனக்கு யாரும் ஆதரவு இல்லை என்று கூறினார்.

'அந்த தாய்க்கு உதவிப் பணம் கிடைக்க உடனடி ஏற்பாடு செய்யுங்கள்' என்று புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

## நிதியளிப்பு பொதுக்கூட்டம்

திட்டக்குடி, ஏப். 18— திராவிடர் கழகப் பிரச்சார வேன் நிதி அளிப்பும் பொதுக் கூட்டமும் இம்மாதம் 22-ந்தேதி (புதன்) மாலை 6 மணிக்கு திட்டக்குடியில் நடக்கிறது.

ஆ. கிருட்டினசாமி தலைமை வகிக்கிறார். கே. திருவாரூர் தங்கராசு வேன் நிதியை பெறுகிறார். திருச்சி ஆர். சவுந்திரராசன் எம்.எல்.ஏ. பி. கலியமூர்த்தி எம்.எல்.ஏ. இரா. ரெங்கசாமி, பழனிமுத்து ஏ. கருப்பன். டி. ஆர். சுந்தரம், அன்பில் பாலு மற்றும் பலர் பேசுகின்றனர்.



மெட்டல்பாக்ஸ் தேர்தல்

# வை. பெருமாள் அமோக வெற்றி: தி.மு.க. படுதோல்வி

சென்னை, ஏப் 18— சென்னை மெட்டல் பாக்ஸ் தொழிற்சாலையில் நடந்த ஊழியர் சங்க தேர்தலில் கழக அணி அதிக வாக்குகள் பெற்று வெற்றி பெற்றது. ஊழியர் சங்க தலைவராக வை பெருமாள் அதிக வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார்.

சென்னை மெட்டல் பாக்ஸ் தொழிற்சாலை ஊழியர்கள் சங்க தேர்தல் நடைபெற்றது. இத்தேர்தலில் கழக அணி வேட்பாளர்கள் அதிக வாக்குகளை பெற்று அமோக வெற்றி அடைந்தனர். கழக அணியினரை எதிர்த்து போட்டியிட்ட தி. மு. க. வினர் படுதோல்வி அடைந்தனர்.

மெட்டல் பாக்ஸ் கம்பெனி ஊழியர் சங்க தலைவர் பதவிக்கு வை. பெருமாள் கழகம் சார்பாக போட்டியிட்டார். அவரை எதிர்த்து தி. மு. க. வைச் சேர்ந்த மா. வே. நாராயணசாமி போட்டியிட்டார்.

போட்டி முடிவில் வை. பெருமாள் 147 வாக்குகளைப் பெற்று அமோக வெற்றி பெற்றார். அவரை எதிர்த்து போட்டியிட்ட தி. மு. க. பிரமுகர் 95 வாக்குகளை பெற்று படுதோல்வி அடைந்தார். இதேபோல் துணைத் தலைவர் பதவிக்கு போட்டியிட்ட கழக எம். எல். ஏ. சக்கரபாணி 149 வாக்குகளை பெற்று அவரை எதிர்த்து போட்டியிட்ட தி. மு. க. பிரமுகர் முருகேசனை தோற்கடித்தார்.

மற்றும் இத்தேர்தலில் செயலாளர் பதவிக்கு போட்டியிட்ட கழக வேட்பாளர் ராமலிங்கம், துணைச்செயலாளர்கள் பதவிக்கு போட்டியிட்ட கழக அணி வேட்பாளர்கள் டி. தங்கசாமி, கே. பி. கேசவன் ஆகியோர் வெற்றிபெற்றனர். மேலும் மற்றொரு துணைத்தலைவர் பதவிக்கு போட்டியிட்ட கழக வேட்பாளர் எம்.கே சுரேந்திரகுமாரும் இத்தேர்தலில் வெற்றி பெற்றார்.

இச்சங்க பொருளாளராக போட்டியிட்ட கழக வேட்பாளர் தேவதாஸ் அவரை எதிர்த்துபோட்டியிட்ட வேட்பாளரை அதிக வாக்கு வித்தியாசத்தில் தோற்கடித்தார்.

மெட்டல் பாக்ஸ் கம்பெனியில் அதிக வாக்கு பெற்று தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட வை.பெருமாளுக்கு தொழிலாளர்கள் மாலை அணிவித்து பாராட்டு தெரிவித்தனர்.

சைதாப்பேட்டை பகுதியில்

# கழகத் தோழர்கள் விலகியதாக முரசொலி புளுகு

## சைதை துரைசாமி கடும் கண்டனம்

சென்னை, ஏப். 18-கழகத்திலிருந்து 200 பேர் விலகியதாக முரசொலியில் பொய்ச் செய்தி வெளியிட்டிருப்பதற்கு சைதை துரைசாமி கடும் கண்டனம் தெரிவித்துள்ளார்.

சைதாப்பேட்டை பகுதி கழக செயலாளர் சைதை துரைசாமி விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது;

முரசொலி பத்திரிகையின் செய்தி ஆசிரியர், துணை ஆசிரியர், புரூப் ரீடர் ஆகிய அனைத்துப் பொறுப்புக்களையும் கவனித்து வருவதாக ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்துள்ள கருணாநிதி, அன்றாடம் தனது முரசொலியில் முன்பைவிட அதிகப் பொய்களையே பரப்பிக் கொண்டிருக்கிறார்.

சைதாப்பேட்டை தொகுதியில் கழகத்திலிருந்து 200 பேர் விலகி அவரது கட்சியில் சேர்ந்து விட்டதாக கருணாநிதி எழுதி புரூப் திருத்தி செய்தி வெளியிட்டிருப்பது அவரது புளுகுகளுக்கெல்லாம் உச்சக் கட்டப புளுகாகும்.

ஆனால் உண்மை என்ன? ஈக்காடு தாங்கல் பள்ளிப்பட்டு, நேருநகர், அண்ணாமலைசெட்டிநகர் ஆகிய பகுதிகளைச் சேர்ந்த 325 பேர் புரட்சித்தலைவர் தலைமை ஏற்று தி.மு.க. விலிருந்து விலகி கழகத்தில் சேர்ந்திருக்கிறார்களே தவிர எவரும் தி. மு.க. வுக்குப் போகவில்லை.

### வெளியிடத் தயாரா?

கருணாநிதியை சவால் விட்டுக் கேட்கிறோம். கழகத்திலிருந்து விலகியதாகச் செய்தி வெளியிட்டிருக்கிறார்களே அவர்கள் பெயர்-கழக உறுப்பினர் எண் ஆகியவற்றை வெளியிட கருணாநிதி தயாரா?

அவர் இந்த அறைகூவலை ஏற்றுக்கொள்ள மாட்டார்— முடியாது!

கழகத்திலிருந்து யாராவதுவிலகியிருந்தால்தானே அவர்கள் பெயர் உறுப்பினர் எண் விவரத்தை முரசொலியில் வெளியிட முடியும்?

இவ்வாறுபொய்ச் செய்தி வெளியிட்டு ஆதாயம்தேட முயல்வது கடும் கண்டனத்துக்குரியது.

தொடர்ந்து இதுபோல் பொய்செய்திகளைமுரசொலி வெளியிட்டுக் கொண்டிருந்தால் சட்டப்பூர்வமான நடவடிக்கை எடுக்கப்படும் என்று எச்சரிக்கிறோம்.

இவ்வாறு சைதை துரைசாமி அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.



கத்திவாக்கம் நகரியம்

## ஒப்பந்தப்புள்ளி விளம்பரம்

இந்நகரியத்திற்கு கீழ்க்கண்ட பொருட்கள் வழங்குவதற்கு மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள் ஒவ்வொரு இனத்திற்கும் தனித்தனி கவர்களில் 1981-ம் ஆண்டு மே மாதம் 4-ம் நாள் திங்கட்கிழமை மாலை 4-00 மணிவரை நிர்வாக அதிகாரி அவர்களால் பெற்றுக்கொள்ளப்படும். வரப்பெற்ற ஒப்பந்தப்புள்ளிகள் அன்று மாலை 4-15 மணிக்கு திறந்து பார்வையிடப்படும். ஒப்பந்தப்புள்ளிகள் ஒவ்வொரு இனத்திற்கான டெபாசிட் தொகையினை ரொக்கமாக செலுத்தி கொடுக்க வேண்டும். இதர விபரங்களை அலுவலக வேலை நாட்களில் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

| வ.எண் | வினியோக இனங்கள் | டெபாசிட் |
|---|---|---|
| 1. | குடிநீர் குளிர் சாதனம் வழங்குதல் | ரூ 100.00 |
| 2. | பூங்காக்களில் ஆர்.சி.சி. சிமெண்ட் பெஞ்சுகள் அமைத்தல் | ரூ. 100.00 |
| 3. | சாலைகளின் குறுக்கே போடுவதற்கு ஆர். சி. சி. சிமெண்ட் பைப் வழங்குதல். | |
| | 1. 9' நீளம்x18" விட்டமுள்ளவை 10 எண்ணிக்கை. | ரூ. 100.00 |
| | 2. 9'நீளம்x12" விட்டமுள்ளவை 10 எண்ணிக்கை. | |
| | 3. 9' நீளம் x 9" விட்டமுள்ளவை 10 எண்ணிக்கை. | |

நாள்: 14-4-81

(ஒ ம்) ஏ. பழனியப்பன் பி. ஏ. (ஹானர்ஸ்)
நிர்வாக அதிகாரி.

# சிதம்பரம் தொகுதியில் கால்நடை வளர்ச்சி: கணபதி பேச்சு

சென்னை, ஏப். 18—சிதம்பரம் தொகுதியில் கால்நடை வளர்ச்சிக்கு பல்வேறு திட்டங்களை அமல்படுத்துமாறு சட்டமன்ற கழக உறுப்பினர் கே. ஆர். கணபதி கேட்டுக் கொண்டார்.

சட்டப்பேரவையில் சிதம்பரம் தொகுதி கழக உறுப்பினர் கே. ஆர். கணபதி பேசியதாவது:-

சிதம்பரம்தாலுக்காவில் சிதம்பரம் தொகுதி, புவனகிரி தொகுதிகளில் தீவிரக் கால்நடை அபிவிருத்தித் திட்டம் இல்லாத குறையைப் போக்க 1981-82-ஆம் ஆண்டிலிருந்து ஐ.சி.டி.பி. திட்டத்தை அமல்படுத்த முன்வந்த சமூக நலத்துறை அமைச்சரையும் புரட்சித் தலைவர் அரசையும் பாராட்டுகிறேன்.

ஆனால் 50 கிளை நிலையங்கள் மட்டும் தென்னாற்காடுமாவட்டத்திற்கு அனுமதிக்கப்பட்டிருப்பதாக அறிகிறேன். அதுபோதாது 100 கிளை நிலையங்களை தென்னாற்காடு மாவட்டத்திற்கு ஒதுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தற்போது தமிழகம் பூராவுக்கும் 455 ஆடு வளர்ப்பு கூட்டுறவு சங்கங்கள் தான் இருக்கின்றன. அதை இரண்டு பங்கு அதிகரிக்கவேண்டும். சிதம்பரம் தொகுதி, புவனகிரி தொகுதிகளில் ஆடுவளர்ப்பு கூட்டுறவு சங்கங்கள் புதிதாக ஆண்டு ஒன்றுக்கு ஒவ்வொரு ஒன்றியத்திற்கும் குறைந்தது 5 சொசைட்டிகள் வீதம் ஆரம்பிக்கப்படவேண்டும்.

சிதம்பரத்தில் இறைச்சியை அபிவிருத்தி செய்ய வெள்ளாடு வளர்க்கும் திட்டத்தை அறிமுகப் படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த நேரம் பருவமழை தவறியதால் அதிகமாக கோமாரி நோய் வருகின்ற காரணத்தால் நோயினுடைய தன்மையை அறிந்து, கோமாரி நோய்த்தடுப்பு மருந்துகளுடைய விலையைக் குறைத்து, அதிகஉற்பத்தி செய்து கொள்முதல் செய்யவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

சிறு விவசாயிகள் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் பொருளாதாரத்தில்மெலிந்தோர் நலிந்தோர்களுக்கு இலகுவில் கடன் கொடுக்க மான்யம்வாங்கிக்கொண்டு கூட கொடுக்க சில வங்கிகள் முன்வரத் தயங்குகின்றன.

இவ்வாறு கே. ஆர். கணபதி பேசினார்.

# திருவேற்காடு தேவி கருமாரியம்மன் ஆலய

# சித்திரா பௌர்ணமி விழா

## (சிறப்பு மலர்)



மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் வாழ்த்து!

திருவேற்காடு அருள்திரு தேவி கருமாரியம்மன் திருக்கோயிலில் நடைபெறும் சித்திரா பௌர்ணமி விழா இனிதே நடைபெற எனது நல்வாழ்த்துக்கள்.

அன்பன்,

எம்.ஜி. இராமச்சந்திரன்

## விற்புருவக் கண்ணகியும் வேற்காட்டு கருமாரியும்!

[சிலம்புச்செல்வர் ம. பொ. சி.]

'பெண்மைக்குப் பெருமை தரும் நாடுகளிலே தலையாயது நம் தமிழ்நாடு. அதனால் தெய்வங்களிலேயும் பெண் தெய்வத்திற்கே அதிகமாகப் பெருமை தருகின்றனர். தமிழ் மக்கள் அந்த பெண் தெய்வங்களிலேயும், மாரியம்மனே தமிழினத்தின் குலதெய்வமாகி விட்டாள். முருகன் எப்படித் தமிழ் தெய்வமோ, அதுபோலத்தான் மாரியம்மனும்.

'மாரி' என்னும் சொல்லுக்கு 'மழை' என்பது பொருள். சித்திரைத் திங்களில் தொடங்கி ஆடித் திங்கள் வரை கோடை வெயில் கொளுத்துவதால் நாட்டில் பிணிகள் பெருகுகின்றன அந்த நேரத்திலே மழை வரம் வேண்டிக் கொண்டாடப் படுவதால் 'மாரியம்மன்' என்று தமிழினத்தின் குலதெய்வத்திற்குப் பெயர் ஏற்பட்டது.

திருவேற்காட்டில் கருமாரியம்மன் நெடுங்காலமாக இருந்து வருகிறது. என்றாலும், அண்மையில் தான் திருவேற்காடு மாரியம்மன் தமிழினத்தால் கவனத்திற்குரியவளாகி விட்டாள்.

திருவேற்காடு கருமாரியம்மன் கோயிலின் அறங்காவலர்க் குழு மக்களின் வாழ்க்கைத் தேவைகளை வழங்கும் சமூகப் பணிகள் பலவற்றையும் புரிந்து வருகிறது. இந்த பணிகள் இன்னும்விரிவடையவேண்டுமென்பது என் விருப்பம்.

## முத்துச் சிதறல்

**சி. ஜி. ரங்கபாஷ்யம்**
ஐ. ஏ. எஸ்.,
தன்னுள் வருவாய் வாரிய உறுப்பினர்

அடுத்தடுத்த அறிவாற்றல் மிக்க நிர்வாகத்தின் திறமை மிக்க வழிகாட்டுதலின் கீழ் யாத்ரிகர்களுக்கு வசதிகள் ஏற்படுத்துவதில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காணப்படும் இப்புனிதமான ஆலயத்திற்கு வருவது எப்போதும் மகிழ்ச்சியும் சிறப்புரிமை மிக்கதுமான ஓர் அனுபவமாகும். இப்போது செயல் அலுவலராக இருக்கும் மிக்க அனுபவம் வாய்ந்த திரு. நாகராசன் எல்லா வகையிலும் உயர்தரமான திறமையைப் பேணிக்காத்து வர தமது உழைப்பு எதையும் மீதம் வைக்கவில்லை. திரு. சர்வேஸ்வரராவ் இவ்வாலய அறங்காவலர் குழு தலைமையை ஏற்றுள்ளது எனக்கு திருப்தி அளிப்பதாக இருக்கிறது என்பதுடன் அவரது உணர்ச்சி மிக்க தலைமையில் இந்த ஆலயம்மேலும்குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காண்பிக்கும் என்பதில் எனக்கு ஐயமேதுமில்லை.

**பொ. அன்பழகன் எம்.பி**
மதுரை.

நான் இன்று வருகை தந்த ... து கோயில்சுத்தமாக நல்ல முறையில் நிர்வாகம் ... பெறுகின்ற பாங்கி... காண்கிறேன். மகிழ்ச்சி,

**மாண்புமிகு பாலகிருஷ்ணபிள்ளை**
அமைச்சர்,
கேரளா

வழிபடுவதற்கு இவ்வாலயம் வந்தேன். வழிபட எல்லாசிறந்தவசதிகளையும் திருக்கோயில் நிர்வாகிகள் செய்திருந்தனர்.

**திரு. பா. ராமச்சந்திரன்,**
எம்.ஏ.
முன்னாள் மத்திய அமைச்சர்

தேவி கருமாரியம்மன் ஆலயத்திற்கு வந்து தரிசனம் செய்தது பெரும் பாக்கியம் என்று நம்புகிறேன். கோயில் சிறந்த முறையில் பராமரிக்கப்படுகிறது என்பதை பார்த்து நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். நிர்வாகத்தில் இருப்பவர்களை நான்மிகவும்பாராட்டுகிறேன். அறங்காவலர்குழு தலைவர் திரு. சர்வேசுவரராவ் அவர்கள் திறம்பட செயல்படுவதைப் பார்த்து அவரையும், அவருடன் பணியாற்றும்சகாக்களையும் நான் பாராட்டுகிறேன்.

**மாண்புமிகு எம். வீரப்ப மொலி,**
நிதி மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர்
கர்நாடக அரசு

ஆலய அதிகாரிகள் எனக்கும் என் துணைவியாருக்கும் அன்பான வரவேற்பினை அளித்தார்கள் ஆலயம் தூய்மையாக வைக்கப்பட்டது.

**எஸ். கே. பாலகிருஷ்ணன்,**
மேயர், மதுரை மாநகராட்சி,

கருமாரி அம்மன் கோயிலின் சிறப்பும், தனித்தன்மையும் பார்க்குமிடத்து அனைத்து மக்களின் இதயங்களில் குடியிருக்கும் கடவுள் மாத்திரமல்லாமல் காக்கும்கடவுள் என்பதைபாடலிலே பாடிக்கேட்ட நான் இன்று அம்மனின் தரிசனம் கிடைத்து ஆனந்தம்கொண்டேன். கோவில் நிர்வாகம் சீராக நடைபெறுகிறது.

## வான் மழை சிறக்க அருள்மழைஅருள்வீர்!

**இரா. சர்வேசுவரராவ்**

தலைவர்: அருள்திரு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்
உறுப்பினர்: தமிழ்நாடு அறநிலையக்குழு, சென்னை.

கேட்டோருக்கு கேட்ட வரமளிக்கும் கலியுக தெய்வம் கருமாரியம்மன். நாளுக்குநாள் பெருகிவரும் பக்தர் கூட்டத்தில்சின்னஞ்சிறிய ஊரான திருவேற்காடு சிறு நகரமாக உருவாகி வருகிறது. உண்டியல். அர்ச்சனை மூலம் பெருநிதி பெருகிய வண்ணம் உள்ளது.



இரா. சர்வேசுவரராவ்

தமிழ்நாட்டுக் கோயில்களில் குறுகிய காலத்தில் இவ்வளவு வளர்ச்சியடைந்துள்ள ஆலயம் எங்கும் இல்லை. பழைமை வாய்ந்த பிரபல்யமான பல கோயில்களின் வருவாயை கடந்து முதல் வரிசையை நெருங்கிக் கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் கருமாரியம்மன் மீது பக்தர்கள் கொண்டுள்ள நன்னம்பிக்கையே! அருள்மாரி பொழியும் அன்னை கருமாரியம்மன் பல வீடுகளில் அருளாட்சி புரிகிறாள்! கருமாரியை நினைத்த நேரத்திலேயே அருள் மழையில் குளித்த உணர்வு அனைவர் நெஞ்சிலும் ஏற்படுத்தும் அபூர்வ சக்திதான் அன்னை கருமாரியம்மன்.

இத்தனை சிறப்புகள் வாய்ந்த திருக்கோயிலின் அறங்காவலர் குழுவின் தலைவராக பணியாற்ற கிடைத்த வாய்ப்பை எண்ணி மகிழ்கிறேன். வாய்ப்பளித்த தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களுக்கும் அறநிலைய அமைச்சர் அண்ணன் ஆர். எம். வீ. அவர்களுக்கும்எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தற்பொழுது ஏற்பட்டுள்ள வறட்சி நீங்கி என்றும் வளம் பெற்று தமிழ்நாடு வாழ, தமிழக அரசு கீர்த்தியுடன் விளங்க எல்லாம் வல்ல என் அன்னை கருமாரியை இறைஞ்சுகிறேன்.



ஆதிமுதல் தொண்டாற்றி அருள் மணக்கும் தேவி உபாசகர் தவத்திரு சுவாமி இராமதாசர் திருவேற்காடு

### ஆலய அறங்காவலர்கள்



புலவர் வேதா



எம். பி. நாராயணன்



கலவை அ. கோபாலகிருஷ்ணன்



வை. சுந்தரம்

**எஸ். அரவிந்த்**
மாவட்ட ஆட்சியர்
செங்கல்பட்டு

இன்று இவ்வாலயத்தை வழிபட்டேன். வழிபடும் பக்தர்கள் முறையாக சென்றுவழிபட்ட பாங்கும் தலைமை அறங் காவலரும் இதர அறங் காவலர்களும் ஆலய நிருவாகத்தில் கொண்ட தனிப்பட்ட அக்கறையையும் கண்டு மகிழ்ச்சியுறுகிறேன்.



அருளை அள்ளி வழங்கும் அன்னை கருமாரியம்மன் திருவேற்காடு

## "கருமாரி இல்லாமல் கதியேது உயிர்க்கு?"

(த. நாகராசன், உதவி ஆணையர்)
நிர்வாக அதிகாரி, தேவி கருமாரியம்மன் திருக்கோயில்.

சென்னையை அடுத்த திருவேற்காட்டில் நின்றொளிரும் தேவி கருமாரி தனது திவ்விய தரிசனத்தால் எல்லையற்ற கருணை அருள் கொழிக்குப் பார்வையால் அவனி மக்களுக்கு வாரி வழங்கி இந்திய நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்தும் உலகின் பல பாகங்களிலிருந்தும் எண்ணற்ற பக்தர்களை தன்பால் ஈர்த்து இரட்சித்து வருவது ஓர் விந்தைக்குரிய செயலாகும்.

வித்தகி கருமாரி வேற்காட்டில் எழுந்தருளி சித்துக்கள் பலபுரிந்து தேரா மனத்தோரின் தீரா வினைகளையும் கெல்லி எடுத்து, தஞ்சம்என்று வருவோரின் சஞ்சலம் போக்கி மங்கலம் அருளும் பல மகத்துவங்களை புரிவதன் மூலம் கலியுகத்தில் ஓர் கண்கண்ட தெய்வமாக காட்சி தருகிறாள். நவிலொண்ணு நலங்களை நயம்பட செய்து பல அற்புதங்களைப் புரிந்து வருகிறாள்.

சாதி சமய சழக்குகளில் சிக்கி, சரித்திரத்தில் கறை படியும் காரியங்களைசெய்து வரும் இந்நாளில் இந்துவல்லாத பிறமதத்தவரும்இவ்வாலயம் வந்து இவ்வம்மனை வணங்கி வழிபட்டுச் செல்வது இவ்வாலயத்தில் நடைபெறும் அன்றாட அற்புத நிகழ்ச்சி, சமயம் சமரசம் கொள்ளும் பொற்புடை நிகழ்ச்சி.

காலங்கடந்து, கலை கடந்து, நிலை கடந்து, கருணாதீத ஞானங்கடந்து நித்திய பொருளாய் விளங்கும் நிர்மலவேணி கருமாரியைக் கடல் கடந்து வந்து வழிபட்டுச் செல்வோரின் எண்ணிக்கை கணக்கிலடங்கா.

இங்கிலாந்து நாட்டிலிருந்து டாக்டர் பிரேம் குமாரும், அமெரிக்க நாட்டிலிருந்துசீனுவாசபிரகாசும், குவைத்நாட்டிலிருந்து நீலாவும், உஷா சோமசுந்தரமும், துபாய் மலேசியா, சிங்கப்பூர் மற்றும் தென்கிழக்கு ஆசிய நாட்டிலிருந்தும் ஏராளமானோர் மாதம் பிறந்ததும் தம் ஊதியத்தில் ஒரு பகுதியை அன்னை கருமாரிக்கு அனுப்பி வைத்து அருளைப் பெறும் நிகழ்ச்சி நெகிழ்ச்சி மிகும் எழுச்சியான செய்தியாகும்.

ஆங்கிலநாட்டில் நீண்ட நெடுங்காலமாக தங்கி வதியும் இராமநாதபுரம் இளைய அரசர்இவ்வாலயம் வந்து வழிபட்டபோது இங்கிலாந்து தேசத்தில் உள்ள இந்தியர்கள் குறிப்பாக தமிழர்களின் இல்லங்களில் உள்ள பூசை அறையில் தேவி கருமாரியின் திரு உருவப்படம் இடம் பெற்றுள்ள செய்தியை மகிழ்ச்சி பொங்க குறிப்பிட்டு அதன் காரணமாகவே கருமாரியைவழிபட திருவேற்காடு வந்ததாகவும் பெருமை பொங்க சொன்னார் என்றால் கருமாரியின் புகழ் சொல்லப் போமோ?



த. நாகராசன்

நைஜீரியா நாட்டைச் சார்ந்த திருசி.ஏ.நவரத்தினம் என்பார் இத்திருக்கோயிலுக்குவருகைபுரிந்து வழிபட்டு தன் எண்ணத்தில் முகிழ்த்திட்ட உள்ளத்து உணர்வுகளை ஏட்டில் வடித்துச் சென்றுள்ளார்.

"நீண்டநெடுங்காலமாக ஆவலுடன் எதிர்பார்த்து இருந்த தேவி கருமாரியின் அருளும்ஆசியும்எங்களுக்கு கிடைத்தன. இந்த இனிய தெய்வதரிசனத்துக்காகவே நீண்ட தொலைவிலிருந்து கடல் கடந்து, மலை கடந்து பல நதித்தடங்கள் கடந்து நாடுகள் பல தாண்டிஇங்கு ஓடோடி வந்துள்ளோம். எங்களது நோய்வாய்ப்பட்டிருந்த ஒரே அன்பு மகள் குணமடைய அன்னை கருமாரியை அகங்குழைய வேண்டினோம். அதிசயிக்கத் தக்க முறையில்குணம் பெற்றாள்என்று நெஞ்சுருக நெக்குருக அன்னை கருமாரியின் இறை அற்புதத்தை விவரித்துச்சென்றுள்ளார்,

இந்த செய்திகளால் அன்னை கருமாரியின் புகழ் கடல்கடந்து மணம் வீசும் மகத்துவம் புரிகிறது.

"கருமாரி இல்லாமல்
வாழ்வேது பயிர்க்கு?
கருமாரி இல்லாமல்
கதியேது உயிர்க்கு?

என்ற பாடலின் தத்துவம் புரிந்தது.

அந்நியநாட்டினர் எனினும் அருளுருவாகிய அன்னை கருமாரியை அகங்குளிர வணங்கி வழிபட்டுஎண்ணியதை எண்ணியாங்குஎய்தி இன்புற்றுச் செல்லும் காட்சி இவ்வாலயத்தில் அன்றாடம்நிகழும்நிகழ்ச்சி.

மழை இன்றேல்
மாநிலமில்லை —
மாரி வறண்டால்
ஆருயிர் வாழ்வில்லை

பயிர் உண்டு உயிர் வளர மாரி முதன்மையானது. அத்தகைய மாரியைதான் நம்மவர் "மாரியம்மனாக" போற்றிப் புரந்தனர். கருமாரி என்பது கார் மேகம். கார்மேகமே கடவுளின் கருணை வடிவம். கருமாரியம்மன் என்றால் கார்மழை போல உலகிற்கு வளஞ் சேர்க்கும் சக்தியாகும். எனவே தான் வானம் வறக்கும் போது கருமாரியம்மனுக்கு கரகம் எடுத்து விழாக் கொண்டாடுவது நமது முன்னோர் பழக்கம். மாரி வறண்டு வருந்தும் நிலையை எங்கணும் பார்க்கிறோம்.

கருணையை மாரி போன்று பொழியும் கருமாரி பாருயிர் வாழ பரிந்தருளட்டும்! பஞ்சம் பிணி தவிர்த்திடட்டும்! நாடு செழித்திட, வீடு செழித்திட நல்ல மழை பொழியட்டும்:

அருள்வழியும் பார்வையால் அன்னை கருமாரி இந்த அவனிக்கு ஏற்றம் தந்திடட்டும்.



மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் வாழ்த்து!

பல விழாக்களைச் சிறப்புடன் கொண்டாடும் திருவேற்காடு அருள் திரு. தேவி கருமாரி அம்மன் திருக்கோயில் சித்திரா பௌர்ணமி விழாவை சிறப்புடன் கொண்டாடுவதை அறிந்து மகிழ்கிறேன். விழா இனிதே நடைபெற எனது நல்வாழ்த்துக்கள்.

அன்பன்,

இராம. வீரப்பன்

## மாரியே மரகதமே!

மாரியே மருக்கொழுந்தே மரகதமே உந்தனுக்கு
மாதம் முழுவதிலும் மங்களமாம் திருநாளாம்!
நாளெல்லாம் அபிடேகம்! நானாவித அலங்காரம்!
ஆனியிலே மங்களமாம்! ஆதிவார உற்சவமாம்!
ஆடியிலே தேரோட்டம்! ஐப்பசியில் கரகாட்டம்!
முத்துமணி தோரணங்கள்! அத்திமர வாகனங்கள்!
கற்பூர ஆராத்தி! காணபல சேவார்த்தி!
மஞ்சள் திருகாப்பு! மணிமுத்தில் வளைகாப்பு!
காலையிலே கோபூசை! கறுக்கலிலே மணிஓசை!
மாசி மகத்தோடு மார்கழியில் தனுர்பூசை!
விசாகம் வைகாசி! புரட்டாசி மணிக்காட்சி!
மாரி மகராசி மாதமெல்லாம் உன் ஆட்சி!
தேவியே கருமாரி தெள்ளமுதே உந்தனுக்கு
சித்திரையில் பௌர்ணமியாம்
பங்குனியில் உத்திரமாம்!
கார்த்திகையில் பலதீபம்! கனிதையில் திருப்பூசம்!
காணும் கருமாரி! கருணைபுரி அருள்மாரி!

-புலவர் வேதா
அறங்காவலர்.

## அனுபவித்தால் புரியும்

(சௌந்தரா கைலாசம்)

அருள்வழியப் பார்க்கின்ற பார்வையால் வந் (து)
ஆட்கொள்ளும் கயற்கண்ணித் தாயே! துன்ப
இருள் கிழியத் துணைக்கு வரும் ஈடில் லாத
இதயத்துத் திருவிளக்கே! அரிய ஞானப்
பொருள் தெளியப் பூணுமொரு மௌனத் தூடே
பொங்கிவரும் சுவையமுதே! போற்றி! சீர்த்த
தெருள் பொதுளும் முழுமதியம் தனைப்போல் தண்மை
திகழுமொரு திருமுகத்தோய்! போற்றி! போற்றி!
காதார உன் குரலைக் கேட்கின் றேன்என்
கண்ணார உன்னசைவைக் காண்கின் றேன்நான்
சேதார மில்லாத தங்க மாகச்
செய்கின்றாய்என்வாழ்வைத்தெருவெல்லாம்போய்
ஆதாரம் காட்டிடவா முடியும் ஒன்றி
அனுபவித்துப் பார்த்தால்தான் புரியும் அம்மா!
போதாகு முன்னேயிவ் வுலகத் தாரைப்
புறப்பட்டு வம்மினென அழைக் கின்றேனே!

## நலம் நல்கும் தேவி

(அழ வள்ளியப்பா)

திருத்தலமாம் வேற்காட்டைச்
சேரும் போதே
தெம்பு வரும்; தெளிவு வரும்;
தீமை நீங்கும்
அருமைமிகு கோபுரத்தை
நோக்கும் போதே,
அழகொளிரும்; அமைதி தரும்;
அருகில் ஈர்க்கும்.
அருளுருவாம் அன்னைபதம்
பணியும் போதே,
அன்புமிகும்; பண்புமிகும்;
அல்லல் தீரும்.
ஒருமையுடன் உளமுருகிப்
பாடும் போதே,
ஒப்பரிய நலங்களெல்லாம்
ஒருங்கு சேரும்.